உய்த்தாட்டித்திரியாதேயுள்ளமேயொழிகண்டாயூன்கணோட்ட
மெத்தாலுங்குறைவில்லையென்பர்காணெஞ்சமேநம்மைநாளும்
பைத்தாடுமாவினன்படர்சடையன்பரஞ்சோதிபாவந்தீர்க்கும்
பித்தாடிபுலியூர்ச்சிற்றம்பலத்தெம்பெருமானைப்பெற்றாமன்றே. (௬)

முட்டாதமுச்சந்திமூவாயிரவர்க்குமூர்த்தியென்னப்
பட்டானைப்பத்தராய்ப்பாவிப்பார்பாவமும்வினையும்போக
விட்டானைமலையெடுத்தவிராவணனைத்தலைபத்துநெரியக்காலாற்[றே
றொட்டானைப்புலியூர்ச்சிற்றம்பலத்தெம்பெருமானைப்பெற்றாமன்

கற்றானுங்குழையுமாறன்றியேகருதுமாகருதகிற்றார்க்
கெற்றாலுங்குறைவில்லையென்பர்காணுள்ளமேநம்மைநாளுஞ்
செற்றாட்டித்தருமனார்தமர்செக்கிலிடும்போதுதடுத்தாட்கொள்வான்
பெற்றேறிப்புலியூர்ச்சிற்றம்பலத்தெம் பெருமானைப்பெற்றாமன்றே.

நாடுடையநாதன்பானன்றென்றுஞ்செய்மனமேநம்மைநாளுந்
தாடுடையதருமனார்தமர்செக்கிலிடும்போதுதடுத்தாட்கொள்வான்
மோடுடையசமணர்க்குமுடையுடையசாக்கியர்க்குமூடம்வைத்த
பீடுடையபுலியூர்ச்சிற்றம்பலத்தெம்பெருமானைப்பெற்றாமன்றே. ()

பாரூருமரவல்குலுமைநங்கையவள்பங்கன்பைங்கணேற்ற
னூரூரன்றருமனார்தமர்செக்கிலிடும்போதுதடுத்தாட்கொள்வா
னாரூரன்றம்பிரானாரூரன்மீகொங்கிலணிகாஞ்சிவாய்ப்
பேரூரர்பெருமானைப்புலியூர்ச்சிற்றம்பலத்தேபெற்றாமன்றே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

கோயில் ஆகிய சிதம்பரம்

தேவாரம்

முற்றுப்பெற்றது.

